

# கசடதபற

நவம்பர் 1978

50 காசு



ஓவியம்: பி. கிருஷ்ணமூர்த்தி

## மூன்று கவிதைகள்

I

நாலும் நடந்தபின்
நானுவிதமாக என் மனம்
போன பின்
நானொரு மரமானேன்

II

நின்றநிலை தவருமல்
சென்றவிடம் சிதருமல்

ஈன்ற தாயினும்
இறந்து மறைந்த
தந்தையினும்
சாலச் சிறந்தது
ஒன்றுன்றுன்றுன்று
இன்று வரை

காலஞ் செல்லச் செல்லச் செல்லக்
கோலங்கள் கலையும்
கைவல்ய ஞானம் கிட்டும்
இன்று வரை

III

நானொரு பேயானேன்
ஆனபின்
ஏனோ நான்
சூடாகப் பிணந்தின்னச்
சுடுகாட்டைச் சுற்றுகின்றேன்
ஒரு குரல் கூறும்
"ஆசை, மச்சான்!
ஆசை!"

நகுலன்

# தமிழ் நாவல்கள்

## ஒரு கண்ணோட்டம்

சா கந்தசாமி

இரண்டாயிரம் காலத்துக் கவிதை வளம் கொண்ட தமிழில் வசன ரூபமான நாவல் தோன்றி ஒரு நூறு வருடங்களே ஆகின்றன என்பது முரண்பாடானதன்று.

இறுக்கமான சமூக வேறுபாடுகள் தகர்ந்து, அனைவரும் கல்வி கற்கும் உரிமையைப் பெற்ற பின்னால் கிறிஸ்துவரான வேதநாயகம் பிள்ளை முதல் தமிழ் நாவல்— 'பிரதாப முதலியார் சரித்திர'த்தை எழுதினார். வரலாற்றைப் பார்க்கையில் வேதநாயகம் பிள்ளையின் செயல் முன்னோக்கி எடுத்து வைக்கப்பட்ட முதல் அடியென்றே சொல்ல வேண்டும்.

வேதநாயகம் பிள்ளையின் நண்பரான மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை—கோபாலகிருஷ்ண பாரதியின் 'நந்தன் சரித் திர'த்தில் சொற்பிழைகள் இருப்பதால் முன்னுரை வழங்க மறுத்த அதே மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை—ஸ்தல புராணங்களாக எழுதிக் கொண்டிருந்தபோது, முன்சீப்பாகப் பணியாற்றிய வேத நாயகம் பிள்ளை தமிழில் நாவல் எழுதினார்.

வசனத்தில் இலக்கியத்தைப் படைக்க முடியுமென்று வெகு சொற்பமாகவே உணரப்பட்டிருந்த காலத்தில் வேதநாயகம் பிள்ளை நுண்ணறிவுடன் செயல்பட்டார். அவரது ஆங்கிலப் படிப்பு, அற வுணர்வையும், நீதியையும் அழுத்திச் சொல்லும் ஒரு கதையை சிக்க லற்ற சம்பவங்களின் தொகுப்பாக—நகைச்சுவையோடு தமிழில் எழுத வைத்தது.

படிப்பு, பொதுப்பணித்துறை, அந்நிய மொழியில் சொந்தக் காரியங்களை நடத்திக் கொண்டு போவது—ஆகியவை பற்றி அவர் தெரிவிக்கும் கருத்துக்கள் இன்றும் உயிர்த் தன்மை கொண்டே இருக்கின்றன. நடைமுறை அமைப்பு மீது தீவிர முரண்பாடுகள் கொண்டிருந்த அவரின் அபிப்ராயங்கள், அவர் காலத்து அபிப் ராயங்கள், என்பதற்கு மேலே சென்று நிரந்தரத் தன்மை கொண் டிருப்பதை மிகவும் சிறப்பாகச் சொல்ல வேண்டும்.

நல்லது, தீயது என்று எதையும் ஸ்தாபிக்காமல் நல்லது என்றும், தீயது என்றும் ஏற்கனவே சொல்லப்பட்டிருப்பதை மறுபடி யும் சொன்ன 'பிரதாப முதலியார் சரித்திரம்'தான் பெரும்பாலான தமிழ் நாவல்களுக்கு முன்னோடி. இந்த நாவலிலிருந்து ஒவ்வொரு வரும் தமக்கு உவப்பான அம்சத்தை எடுத்துக் கொண்டார்கள்,

ஃ

கல்கி போன்றவர்களுக்கு இலேசான வரலாற்றுப் பின்னணியும், நகைச்சுவையும் பிரதானமாகப்பட்டது. மு. வ. போன்றவர்களுக்கு அறவுணர்வு—நீதி பற்றிப் பேசுவது உவப்பாக இருந்தது.

தமிழ் இலக்கியத்தில் பொதுப் பண்புகளாக இவை ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்த நேரத்தில், அவற்றிற்கு நேர்மாருக, அசலான வாழ்க்கையின் பல்வேறு அம்சங்களைப்பற்றி யதார்த்தமாகவும், கலைப் பாங்குடனும் எழுதும் எழுத்தாளர்கள் தீவிரமான கலைப் பிரக்ஞை யுடன் செயல்பட்டுக் கொண்டு வந்தார்கள். ஒன்றைப் பற்றிக் கொண்டு பின்னல் போவதை உதறிவிட்டு, வாழ்க்கையை அசலாகப் படைத்தார்கள். இவர்களில் முதன்மையானவராக புதுமைப் பித்தனைச் சொல்ல வேண்டும், தமிழ்ச் சமுதாயத்தின் மனப்பாங்கு, செயல் திறன், அறிவு எல்லாம் இவர் கதைகளில் போலித்தனமின்றி புனையப்பட்டிருக்கின்றன.

கா. சி. வெங்கடரமணி நாட்டில் ஏற்பட்ட பிரதான போராட்டத்தையும், சமூக மாறுதல்களையும் நாவல்களில் சித்தரித்துக் கொண்டிருந்தபோது, சற்றேறக் குறைய அதே காலத்தில் புதுமைப் பித்தன் திருநெல்வேலி மாவட்ட மக்களின் பேச்சுத் தமிழில், மனிதர்களின் சாசுவதமான பிரச்னைகள் பற்றி, இன்னொரு விதத்தில் சாசுவதமாக எழுதிக் கொண்டிருந்தார். அவரைப் போலவே செயல்பட்டவர் மௌனி. பிறகு க. நா. சுப்ரமண்யம்.

புதுமைப் பித்தனைப் போலவே விமர்சனம், கவிதை, நாவல், சிறுகதை—என்று இலக்கியத்தின் பல்வேறு பிரிவுகளிலும் ஈடுபாடு கொண்ட க. நா. சுப்ரமண்யத்தின் நாவல்கள் தமிழ் இலக்கியத்தில் சிறப்பிடம் பெறக் கூடியவை. மரபான சம்பிரதாயங்களையும், அதி தீவிரமான, உணர்ச்சி பூர்வமான காட்சிகளையும் உதறிவிட்டு கலா பூர்வமான மரபை ஸ்தாபிப்பவை—'அசுரகணம்', 'ஆட்கொல்லி', 'வாழ்ந்தவர் கெட்டால்'. இவைகள் பலருக்கும் அறிமுகமான 'பொய்த்தேவு', 'ஒருநாள்' போலவே மிகவும் உயர்வான நாவல்கள். எதையும் ஸ்தாபிப்பதைத் தவிர்த்து, வாழ்க்கையை ஒரு மனிதனின் அநுபவம், பிரச்சினை, அதனைத் தீர்க்க அவன் மேற் கொள்ளும் காரியங்கள் எல்லாம் இயல்பாகவும் அறிவுக்கு ஏற்கத் தக்கவை யாகவும் சொல்வது இந்நாவல்களின் சிறப்பு.

இம்மரபில் இன்னும் ஒரு படி மேலே சென்றவர் என்று நகுலனைக் குறிப்பிட வேண்டும். நகுலனின் நாவல்கள் அறிவுபூர்வ மானவை. எனவேதான் புரியவில்லை என்று அடிக்கடி சொல்லப்படு கிறது. அதோடு முக்கியமாக அவர் சித்தரிக்கும் நாவல் உலகம் முன்பின் அறிமுகம் இல்லாததாகவும், பழக்கமற்றும் இருக்கிறது. நாவலில் வரும் மனிதர்கள் சாதாரண மனிதர்களாக இருந்தாலும் வித்தியாசமாக நடந்து கொள்கிருர்கள். கனவு மயக்கத்திலும், பரவச நிலையிலும் தோன்றும் காட்சிகளும், நிகழ்ச்சிகளும் மிகுந்த அடக்கத்துடன் ஆனல் கோர்வையின்றி சொல்லப்படுவதால் நகுலனின் நாவல்கள் முதல் நோக்கில் புரியாமல் போய்விடுகிற சாத்தியக்கூறுகள் நிறையவே இருக்கின்றன.

கவிதையில் மரபு அழிக்கப்பட்டது போலவே நாவலிலும், சிறுகதையிலும் மரபு என்பது அழியத் தொடங்கியுள்ளது. ஆகை

யால்தான் ஐரோப்பாவில் நாவல் செத்துவிட்டது; சிறுகதை செத்துவிட்டது என்கிறார்கள். ஆனால் இந்தியாவில் தற்போதுதான் முதல் தரமான நாவல்கள் தோன்ற ஆரம்பித்திருக்கின்றன என்பது மிகவும் ஆச்சரியமான உண்மையாகிறது. மிதமிஞ்சிய உணர்ச்சி பூர்வமாக எழுதுவதைத் தவிர்த்து, அடக்கமாகவும், நிஜத்தன்மை யுடனும் வாழ்க்கையின் பல்வேறு சிக்கல்களை எழுதும் எழுத்துக்கள் சென்ற இருபது ஆண்டுகளில் கணிசமாகவே வெளிவந்துள்ளன. கா. சி. வெங்கடரமணி, சங்கரராம், ஆர். ஷண்முகசுந்தரம், கிருத்திகா, தி. ஜானகிராமன், சி. சு. செல்லப்பா ஆகியோரைச் சிறப்பாகச் சொல்லவேண்டும். அநேக மாறுபாடுகளுடன் தரமான இலக்கியத்தைப் படைத்தவர்கள் இவர்கள்.

ஆர். ஷண்முகசுந்தரம் கோவை மாவட்டப் பகுதி மக்களைப் பற்றியும், தி. ஜானகிராமன் தஞ்சை மாவட்டப் பகுதி மக்களைப் பற்றியும், பேச்சுத் தமிழும் வசனமும் கலக்க மிகவும் சிறப்பாக எழுதியவர்கள்.

கிருத்திகா நாவல்களில் மேலே சொன்னவர்களிடம் இல்லாத உளவியல் பாங்கு உண்டு. மனிதர்களை ஆட்டிவைக்கும் சுருதியின் அடிநாதத்தைப் பற்றிக்கொண்டு அவரது நாவல் இருப்பதால் அவை சுலபமாகவே ஓர் இடத்தை ஸ்தாபித்துக்கொண்டு விடுகின்றன. அவரது நாவல்களில் காணப்படும் வசன வளக் குறையை உளவியல் நிறைவு செய்துவிடுகிறது. கதா பாத்திரங்கள் புத்திபூர்வமாக செயல் படுவதையும் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். அவர் நாவல்களில் தனி இடம் பெறுபவை: 'புகை நடுவில்...', 'வாஸவேஸ்வரம்'.

அடுத்து குறிப்பிடவேண்டிய பெயர்கள் - ஜெயகாந்தன், சுஜாதா. சுஜாதா மிகவும் அற்புதமாக வசனம் எழுதுகிறார். ஆனால் வசனமே நாவலுக்கு வலு தராது என்பதற்கு அவரே சாட்சியமகவும் இருக்கிறார். ஜெயகாந்தன் காட்சிப் படுத்துவதோடு இலட்சியத்தைப் பற்றி நிறையவே பேசுகிறார். அவர் நாவல்களில் இலட்சிய வாதமும் கற்பனையும் கலந்து நிஜத்தன்மை கொண்டது போன்ற ஓர் உலகத்தைத் தருகின்றன.

இவர்களுக்குப் பின்னால், நாவல்—இலக்கியம் ஆகியவற்றில் தீவிர ஈடுபாடு கொண்ட பலர் வந்திருக்கிறார்கள். இவர்களின் நோக்கு கற்பனையும் பரபரப்பும் ஊட்டுவது அல்ல. நிஜமானதும், நித்தியமானதுமான வாழ்க்கை உண்மைகளை அறிந்து கொள்ளும் முயற்சியாகவே இவர்களது படைப்புக்கள் செயல்படுகின்றன. இலட்சியம், கொள்கை, ஈடுபாடு எல்லாம் மனிதனை அறியும் முயற்சி யாகி, அதி தீவிர உணர்ச்சிகளையும், சாகசங்களையும் நாவல் உதறி விடுவதால், இவர்களின் நாவல்கள் வித்தியாசமாகப் படுகின்றன.

அசோகமித்திரனின் 'கரைந்த நிழல்கள்', வண்ண நிலவனின் 'கடல்புரத்தில்', ப. சிங்காரத்தின் 'புயலில் ஒரு தோணி', நாஞ்சில் நாடனின் 'தலைகீழ் விகிதங்கள்' — இவையெல்லாம் குறிப்பிட வேண்டிய சமீப நாவல்கள்,

# அக்கம் பக்கம்

அவசரகாலச் சட்டம் அமுலில் இருந்தபோது தமிழ் வளர்ச்சிக் கழகம் தமிழ் நூல்களுக்கு அளித்துவந்த பரிசளிப்பைத் தற்காலிகமாக நிறுத்திவைத்தது. இன்றுவரை பரிசளிப்புப் பற்றிய பேச்சே இல்லாததால் நிரந்தரமாகவே அது கைவிடப்பட்டுவிட்டதாக எண்ணத் தோன்றுகிறது.

கலைப் படைப்புகளை — எழுத்தாளர்களைத் தேர்ந்தெடுத்து கௌரவப்படுத்துவது என்பது அரசுக்குப் பெருமைதரும் செயலே. ஒரு சிறந்த எழுத்தாளன் பரிசு பெறுகிறான் என்பதோடு விஷயம் முடிவடைந்து விடுவதில்லை.

ஒரு நல்ல கலைஞனை—அசலான படைப்பாளியைத் தேர்ந்தெடுத்து, பரிசு வழங்கும் நல்ல நோக்கத்தோடு ஆரம்பிக்கப்படும் அரசு நிறுவனங்களின் செயல்கள் அநேகமாக அதைப் பூர்த்தி செய்வதில்லை. அறிவும் — உணர்ச்சியும் சம்பந்தப்பட்ட விஷயத்தை அறிந்துகொள்வதில் பரிச்சயமின்மையே அதற்குக் காரணம் எனலாம்.

கர்நாடக அரசு கலைஞர்களுக்கு மாதா மாதம் பென்ஷன் அளிக்கும் ஒரு திட்டத்தை அறிமுகப் படுத்தியுள்ளது. எழுத்தாளர்கள், ஓவியர்கள், சிற்பிகள், சங்கீத வித்துவான்கள் — ஆகியோரில் சுமார் 400 பேர்கள் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ரூ. 500, 250 என்ற விகிதத்தில் பென்ஷன் பெறுகிறார்கள்.

அவர்களின் பெயர்களை அறிவித்த அரசின் அறிவிப்பு பின் வருமாறு சொல்லியது: —

'பென்ஷன் பெறுகிறவர்கள் வறுமையில் வாடுகிறார்கள் என்று அவர்களுக்குப் பென்ஷன் அளிக்கப்படவில்லை. அரசு கலைஞர்களின் நலனிலும், அவர்களைப் பாராட்டி கௌரவிப்பதிலும் மிகுந்த ஈடுபாடு கொண்டுள்ளது என்பதை உணர்த்தும் நோக்கில்தான் பென்ஷன் திட்டத்தை அறிமுகப்படுத்துகிறது'.

இது இப்படியிருக்க தமிழக முதல்வர் லலிதகலா அகாடமியின் தென் மாநிலப் பிரிவைத் திறந்து வைக்கும்போது கூறினார் —

'ஓவியர் மாதவனின் குடும்பம் வறுமையில் வாடுகிறது. அந்தக் குடும்பத்திற்கு உதவி செய்வதற்காக அவர் ஓவியங்கள் சிலவற்றை வாங்குவது பற்றி அவர் குடும்பத்தாருடன் அரசு பேச்சு வார்த்தை நடத்திவருகிறது'.

லலித கலா அகாடமியின் தென் மாநிலப் பிரிவு அலுவலகம் சமீபத்தில் சென்னையில் திறக்கப்பட்டது. தென் மாநிலங்களின் விவகாரங்களைக் கவனித்துக் கொள்ளும் அமைப்பான அதில் தென் மாநிலக் கலைஞர்களின் ஓவியங்களைக் காட்சியில் வைத்திருக்க வேண்டும் என்பது நியாயமான எதிர்பார்ப்பே. ஆனால் மறைந்த திரு. பணிக்கர் ஓவியங்கள் மட்டுமே காட்சியில் வைக்கப்பட்டிருந்தன. அவை பணிக்கர் காலமாவதற்குச் சில மாதங்களுக்கு முன்னால் சென்னையில் ஒரு ஓட்டலில் காட்சியாக வைக்கப்பட்டிருந்தவை.

சுமார் முப்பதாண்டுகள் சென்னை ஓவியக் கல்லூரியில் பணியாற்றியதோடு, சென்னை திருவான்மியூர் அருகில் ஓவியர்களுக்கான ஒரு நகரை — சோழ மண்டலம் — நிர்மாணிப்பதில் பெரும் பங்கு கொண்ட பணிக்கர் தனது ஓவியங்கள் அனைத்தையும் கேரள அரசுக்கு நன்கொடையாக வழங்கியுள்ளார்.

**நா. கிருஷ்ணமூர்த்தி**

●

## இரண்டு கவிதைகள்

பசுமை படர்ந்த
வயல் வெளியில்
வரப்பருகே பிரசவம்
வானை நோக்கி விழித்த கண்கள்
இமைக்காமல் நிற்க
அடிவயிறு பிளந்து உதிர்த்தன
ஒரு நூறு உயிர்கள்
மரித்த நண்டின் குஞ்சுகளை
பருந்து கொத்தாமல்
விழித்த கண்கள் காக்குமோ.

●

நகர்ப்புறத்து இரவுகள்
தேநீர்க் கடைமூலையில்
குளித்தெழும் கோப்பைகளின் சலசலப்பில்
நொறுங்கும்.

தேநீர் குடித்துப் போகும்
தோட்டிகளின் வம்பளப்பில்
சிதறும், விடியும்.

**ஆதிநாதன்**

R. No TN/Ms-C/120 Ka Cha Ta Tha Pa Ra November 1978





Published by N. M. Pathy, 1-20, Turnbull Road, Madras-600 035 Printed by M. K. Swamy at Prem Press, 140, M. K. Amman Koil Street, Madras-600 004. Editor : N. Krishnamurthy.